[30th March 1961

SRI T. S. RAMASWAMY : May I know the number of such societies existing, the number of applications received and how many of these societies were given contributions?

THE HON. SRI P. KAKKAN : There are 38 societies in this State. I do not have figures regarding the number of applications received from them. We have given loans to 14 societies.

SRI V. K. KOTHANDARAMAN : இதுபோன்ற வேலை ஒப்பந்தக் கூட்டுறவு சங்கங்கள் நமது ராஜ்யத்திலே இருந்து விசேஷ சலுகை பெறுவதோடு மட்டும் அல்லாமல் மத்திய சர்க்காரில் இருந்தும் ஏற்றுமதி இறக்குமதி வேலைகளை எடுத்து நடத்துகிறதா? அவர்களுக்கு இந்திய சர்க்கார் மூலமாக என்ன உதவி செய்யப்படுகிறது என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை. நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையிலும் வேலை ஒப்பந்த கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஆதரவு கொடுத்து வருகிறோம்.

SRI R. KRISHNASAMI NAIDU : இந்தத் திட்டத்தின்கீழ் ஜில்லா அளவிலும் ஒரு சொஸைடி ஆரம்பிக்கப்படும் என்று தெரிகிறது. அநுபவ ரீதியில் பார்க்கிறபோது ஜில்லாவிற்கு ஒரு சொஸைடி என்று நடத்துவது அவ்வளவு நன்மை அளிப்பதாக இருக்காது என்று ரிஜிஸ்ட்ரார் முதற் கொண்டு கருதுவதாகத் தெரிகிறது. ஆகவே இப்போது ஏதாவது ஒரு ஜில்லாவிலாவது ஜில்லா சொஸைடி அமைக்கப்பட்டிருக்கிறதா? அது நல்ல முறையில் செயல்படுகிறதா?

THE HON. SRI P. KAKKAN : பல சொஸைடிகள் பல ஜில்லாக்களில் இருக்கின்றன. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒன்று என்பதாகத் தெரிய வில்லை. இதைப்பற்றி தனியாக கேள்வி போட்டால் பரிசீலனை செய்து சொல்கிறேன்.

*Admission to Educational Institutions (Removal of reference to caste)*

* 1212 *Q.*—SRI A. A. RASHEED:
SRI S. M. ANNAMALAI :
SRI N. K. PALANISAMI : } கனம் நிதி அமைச்சர்

தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் ஆகியவற்றில் சேர்வதற்கான விண்ணப்பத் தாள்களில் சாதி, சமூகப் பெயர் குறிப் பிடுவதை விளக்கவேண்டுமென மாநில அரசாங்கங்களுக்கு மத்திய உள்நாட்டு அமைச்சர் கட்டளையிட்டுள்ளாரா?

THE HON. SRI C. SUBRAMANIAM : A communication had been received from the Government of India on the subject and it is under consideration.

SRI A. A. RASHEED : May I know what action has been taken on this?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is under consideration.

SRI S. M. ANNAMALAI : இப்படி ஜாதிப் பெயர்களை நீக்கிவிடுவதால் பிற்பட்ட இனத்தவர்களுக்கு எப்படிச் சலுகை அளிக்க முடியும்? பிற்பட்ட இனத்தவர்கள் என்றே கண்டுபிடிக்க முடியாது போய்விடக்கூடிய நிலைமை ஏற்படுவதனால் சர்க்கார் பிற்பட்ட இனத்தவர்களுக்கு அளித்து வந்த சலுகைகளை நிறுத்திவிட உத்தேசித்திருக்கிறார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதனால் தான் இது பரிசீலனை செய்யப்படவேண்டியதாக இருக்கிறது. பிற்பட்ட இனத்தவர்களுக்கு இன்னும் சிறிது காலம் இந்தச் சலுகை அளித்தாக வேண்டும். ஆகவே இவ்விஷயம் பரிசீலனையில் இருக்கிறது.

30th March 1961]

**Sri A. VEDARATHNAM :** மாணவர்களுக்கு அரசாங்கம் சலுகை அளிக்க வேண்டி இருப்பதனால் இந்தச் சாதிப் பெயர்கள் குறிப்பிட வேண்டியதாக இருந்தது. இப்போது அரசாங்கம் சாதி அடிப்படையில் இல்லாமல், பொருளாதார அடிப்படையில் கல்விச் சலுகைகளை அளிக்க முன் வந்திருப்பதனால் இனிமேல் மாணவர்களிடம் சாதிகள் பற்றிக் கேட்காமல் இருக்க உத்திரவிடுவார்களா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இந்தக் கல்விச் சலுகை 11-வது வகுப்பு வரையில்தான் கொடுக்கப்படுகிறது. இப்போது பிற்பட்ட இனத்தவர்களுக்கு சம்பளச் சலுகை மட்டும் அல்ல, பலவிடங்களில் ஸ்தானம் ஒதுக்க வேண்டியிருக்கிறது. கொஞ்ச காலத்திற்காகவாவது இவை நீடிக்கப்பட வேண்டும். ஆகவே இது தனியாகப் பரிசிலனை செய்து பார்த்து முடிவு செய்யவேண்டியதாக இருக்கிறது.

**Sri A. GOVINDASAMI :** பிற்பட்ட இனத்தவர்களுக்கு இதுவரையில் கொடுக்கப்பட்டு வந்த மாநில சர்க்கார் சலுகை, மத்திய சர்க்கார் சலுகை எல்லாம் இனியும் தொடர்ந்து கொடுக்கப்படும் என்கிற உறுதியை கனம் அமைச்சர் அவர்கள் அளிப்பார்களா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** பட்ஜெட் உரையின் போதே இதைக்கொடுத்தேன். இப்போதும் அந்தச் சலுகை எந்த வகையிலும் பாதிக்கப்படாது என்கிற உறுதியைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

*Five-Year Plans*

* **1213** *Q.*—**Sri N. R. THIAGARAJAN:** கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலும், இரண்டாவது திட்டத்திலும் சென்னை ராஜ்யத்தில் ஒவ்வொரு இலாகாவும் தனக்கு ஒதுக்கிய பணம் யாவும் செலவு செய்ததா ?

(இ) செலவு செய்யாத இலாகா எவை எவை? காரணமென்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** The information [a] is given in the paper placed on the table of the House.

**Sri N. R. THIAGARAJAN :** விவசாயம், நீர்ப்பாசனம், கல்வி, மின்சாரம் ஆகிய துறைகளில் 38 கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டிருப்பதைப் பாராட்டுகிறேன். ஆனால் வைத்திய இலாகாவில் போதுமான பணம் செலவழிக்கப்படவில்லையே. அவ் விலாக்காவுக்காக கொடுக்கப்பட்ட ஸ்பெஷல் மானியம் கூடச் செலவழிக்கப்படவில்லையா?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இதிலே ஸ்பெஷல் மானியம் என்கிற முழு விவரம் தெரியாது, அது உபயோகப்படுத்தப்படவில்லை என்கிற கருத்து நிலவி வருகிறது. இப்போது திட்டங்களுக்காக ஒவ்வொரு இலாகாவுக்கும் இவ்வளவு என்று ஒதுக்கப்பட்டிருந்தாலும் கடைசியில் ஒட்டு மொத்தமாக—கடனாக இத்தனை கோடி ரூபாய் மானியமாக இத்தனை கோடி ரூபாய் அளவுக்குத்தான் மத்திய சர்க்கார் கொடுத்து வருகிறது. இப்படிப் பெறுவதை நாம் எந்த எந்த இலாகாவில் எந்த எந்தத் திட்டங்களுக்காக எவ்வளவு செலவு செய்வது என்று ஆராய்ச்சி செய்து, முடிவு செய்து திட்டங்களை நிறைவேற்றி வருகிறோம். மத்திய சர்க்கார் நமக்குக் கடனாகவும், மானியமாகவும் ஒதுக்கிய தொகை எதையும் வாங்கிக் கொள்ளாமல் விடவில்லை என்று சொல்லிக் கொள்கிறேன்.

*Agricultural Department (Reorganisation)*

* **1214** *Q.*—**Sri A. VEDARATHNAM :** கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) விவசாய இலாகாவின் நிர்வாக அமைப்பை மாற்றி அமைக்க நலாகர் கமிட்டி நம் மாநில சர்க்காருக்குச் செய்த சிபாரிசுகள் என்ன?

---

[a] Printed as Appendix X on page 545 infra.